# அந்தக இரவில் சந்தன மின்னல்



வலம்புரி ஜான்

## அன்னை மூகாம்பிகை வரலாறு

தமிழ்நாடு பதிப்பகம்

கொல்லூரில் குடி கொண்டிருந்து
குவலயப் பந்தைத் தனது
உள்ளங்கையில் உருட்டி விளையாடும்
கோலாபுரி அரசியை—கோல எழில்
கொஞ்சுகிற மாதாவை—நீர்வற்றி—
வயல் வெடித்து—நிலம் கிழிந்து—
வேனில் புருக்களைப் போல
வெடித்துச் சிதறிப்போன ஆற்றுப்
புடுங்கையின் உள்ளும் தேம்பி
இருக்கும் தெண்ணீரைப் போல
என்னைக் காப்பாற்றும் தாயை—
எழுதிக் காட்ட முனைகிறேன்.........

வலம்புரி ஜான்

# அந்தக இரவில் சந்தனமின்னல்



வலம்புரி ஜான்



கொல்லூரில் அமர்ந்து
எல்லாருக்கும் வரம் அருளும்
அருள் நாயகி, ஆனந்த நாயகி,
தத்துவங் கடந்த தயாபரி
வித்தகச் செல்வி
அன்னை மூகாம்பிகைக்கு
இந்நூல் காணிக்கை



○ விலை ரூ. 5-50

○ வெளியீடு எண் : 3
○ தலைப்பு : அந்தக இரவில் சந்தன மின்னல்
○ நூல்வகை : பக்தி இலக்கியம்
○ ஆசிரியர் : வலம்புரிஜான்
○ உரிமை : ஆசிரியருக்கு
○ முதற்பதிப்பு : ஏப்ரல். 1983
○ வெளியிடுபவர் : என். எஸ். நாகப்பா
தமிழ் நாடு பதிப்பகம்
○ அச்சிட்டோர் : மாருதி பிரஸ்
○ ஓவியம் : அமுதோன்
○ முகப்பு உருவாக்கம் : பெலிகன் இந்தியா
○ நூல் கட்டமைப்பு : உமாபதி பைண்டிங்

# அந்தக இரவில்
# சந்தன மின்னல்

வலம்புரிஜான்



தமிழ்நாடு பதிப்பகம்
1, சுந்தரம் ஐயர் தெரு,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.

# இதோ ஒரு கூண்டுக் கிளி கூட்டை உடைக்கிறது

களம் காணச் சேரன் செங்குட்டுவன்; கதைச் சொல்லச் சீத்தலைச் சாத்தன்; காவியம் வடிக்க இளங்கோ அடிகள் கருப் பொருளாகக் கண்ணகிப் பெருமாட்டி; கல்சுமந்து வரக் கனகன் விசயன். வெற்றித்திருநாளுக்கு வீரன் கயவாகு, ஊரெல்லாம் இந்த உணர்வு வெள்ளத்தை வடிக்கச் சிலம்புச் செல்வர் சிவஞானம்.

காலக்கருவறையில் கனக மணிச்சுடராகச் சுற்றிலும் சுழல அருளன்னை மூகாம்பிகை; அவளை நெஞ்சில் குடியேற்றி நினைவலைகளில் தாலாட்ட, பொன்மனச் செம்மல் வலம்வர, வழிபடக் கொடுத்து வைத்தவர்கள் கோடிப்பேர். அவள் அருளால் அவள் தாள் வணங்கி அவளையே எழுதிக்காட்ட இந்தச் சிறுவன் கிறுக்கலைக் கீதை என்று உச்சிமோந்து உள்ளன்போடு அணைத்துக் கொள்ளத் தாய்க்கும் தாயான தமிழ் வாசகர்கள். நெஞ்சில் பயிரான நேச உணர்வை, காகிதக் கப்பலேற்றி ஆர்க்கும் அச்சகக்கடல் கடந்து உங்கள் துறைமுக இல்லங்களில் இறக்கி வைக்கிற இதிகாசப்பணிக்கு இதோ என் நெஞ்சில் பால்மணந்து பருவம் தோறும் என்னைப் பூரிப்பில் ஆழ்த்தும் புலவர் நாகசண்முகம் அவர்கள்!

காலதேவன் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு உத்தரவைப் போட்டுக் கொண்டே போகிருன்.

விதைக்கிறவன் ஒருவன், அறுக்கிறவன் ஒருவன் களஞ்சியத்தில் சேர்க்கிறவன் ஒருவன், வாரி வழங்க ஒருவன், வைத்திருந்து உண்ண வேருெருவன். அதுவே இயற்கைத் தாயின் இயல்பான கட்டளை.

காலம் கனிந்ததும் கால்களை உதைத்துக் கொண்டு கனிந்துகன்றைப் பெறுகிற பசுத்தாயைப் போல என் நெஞ்சில் கருக்கொண்ட இந்த நித்திலத்தை அருள் அன்னை மூகாம்பிகையின் அரவணைப்பு வெளியிலே சிந்தி வியந்து இருந்தும், நானே வெளிச்சத்தில் விதைக்க வைத்திருந்த விதை நெல்லை, பொன்றுப் புதுமைக்கும், குன்றுத வளமைக்கும் குறித்த சொல் கோடியில் ஒன்றுய்க் குவிந்த பெருமான் திரு. நாகசண்முகம் தானே பெற்றுத் தண்தமிழ் நிலத்தில் விதைக்கிருர்.

கொடுத்து வைத்த அந்தக் குபேர இதயத்தைக் குனிந்தே வணங்குகிறேன். எழுத நான்' எடுத்துத் தர அவர். இது அவள் சித்தம்! "நான் ஆர்? என் ஞானங்கள் ஆர்? இடையிலே வந்து இளைப்பாற எண்ணி இயன்றதை எழுத! வல்லபம் உடைத்தானவர்களை ஆசனத்திலிருந்து தள்ளி, தாழ்ந்தவர்களை உயர்த்துகிருர்" என்கிற வேதாகமத்தின் வெள்ளிய வரிகளுக்கு இப்போதைக்கு இந்தச் சிறுவனும் உதாரணம்.

தொட்டிலில் கால்களை உதைத்துக் கிடக்கிற இந்தத் தோல விழ்ந்த எழுத்தை மாங்கனி எழுத்து, மரகத எழுத்து, மருவிலாப் பச்சை மணத்தைத் தரும் எழுத்து— என்று எடுத்துக் கொண்டாடப் பட்டதாய் எனக்கு உற்ற தாயாய் உவப்புடன் வந்தவர் புலவர் கோமான் நாகசண்முகம் அவர்கள்.

இந்த அளப்பறிய அரும்பணிக்காக அன்னை அவருக்கு குறைவில்லா நிதியமும், குன்றுத இளமையும், குறைகள் வாராத வளமையும் வழங்க இருக்கிருள் என்பதை உலகம் உணரப் போகிறது.

என் மன வானத்தில் சிரித்த மான்தளிர் மின்னல் புத்தக வனக்காட்டில் புதுப் பூவாய் மிளிருவதற்கு முயற்சி மேற் கொண்டு வெற்றி பெற்ற இந்த வேதியரைத் தமிழ்கூறும் நல்லுலகம் நெஞ்சில் வளர்த்து நினைவால் வார்க்கும்.

என் உளறல்களே உபதேசங்கள் ஆவதற்கும், மேலெழுந்த வாரியாகச் சொன்னவைகள் மேற்கோள்களாக மின்னுவதற்கும் நானல்ல காரணம். அவளை எழுதினேன், அந்த மயக்கும் சொற்களிலே வானமுதம் வரையின்றிக் கொட்டிக் கிடக்கிறது.

இந்த நூலைப் படிப்போரும் பக்கம் நின்று கேட்போரும் பேறு பெறுவார்கள்.

நூலோடு சென்று நுவலரும் தவவேள்வியாய் தாயாகிச் சிறந்து நிற்கும், அன்னை மூகாம்பிகையைக் கண்குளிரக் காண்கிறவர்கள், பூலோக சொர்க்கத்தில் பூத்துச் சிரிப்பார்கள் புவனம் அவர்களுக்குச் சென்னிசரிக்கும்; சிந்தையில் சிறை வைத்து மகிழும்.

அந்தக இரவில் சந்தன மின்னல் என்ற இந்தத் தலைப் பினைத் தெரிவதில் துணைநின்ற எனது குகன்—கவிஞர் தமிழ் மாறன்—என் சொல்லுக்குச் சுவை சேர்க்க மூகாம்பிகையே முழுநிலவே வடித்த கவிஞர் இளந்தேவன் போன்ரோரை இந்த வேளையில் நினைவிலே கொள்கிறேன்.

புனிதமான இந்த இராத்திரியில் இந்தத் தேவ வசந்தத்தை வாசிக்கிற எல்லா இதயங்களிலும் பால்வார்க்க, பராசக்தி தாயான மூகாம்பிகையை—என் தாய்க்கும் தாயை—தயாபரியை வணங்கி மகிழுகின்றேன்.

என்றென்றும் அன்புடன்

**வலம்புரிஜான்**

சென்னை,
7-4-1983.

# நான் தவம் செய்யாமலே அண்ணன் தந்த வரம் இது!

காளிதாசன் கல்வி கற்காமலே காளியின் அருளால் கவிக் கோமான் ஆனவர். வர்ணனைக்கு இவர்! என்று வையம் ஒரு சேரப் போற்றுகின்ற வாய்ப்பினைத் தம் வளமான கவிதை களால், வார்த்தெடுத்த காப்பியங்களால் நிலையாகப் பெற்றவர்.

வடமொழி இலக்கிய வானில் அவர் ஒரு துருவ நட்சத்திரம், விடிவெள்ளி, கவிக்கடல். உவமைகளின் சங்கமம். திருப்பு முனை!

வலம்புரி ஜான் மூகாம்பிகையின் அருளால் மொழிப் புலன் களைத் தொட்டவர். தொடர்ந்தவர். தமக்கே உரிமையாக்கிக் கொண்டவர். எங்கும் பெய்யும் மழையில் கங்கையில் விழு கின்ற துளிகள் மட்டும் புனிதம் பெற்று விடுகின்றன. எல்லா ருக்கும் பொதுவான சொற்கள் அண்ணன் கைப்பட்டு விடுகிற போது புனித வயிரங்களாய், புண்ணிய முத்துக்களாய், எண்ணத்தைக் கவருகின்ற கோமேதகங்களாய் மாறி, இணைந்து பக்தி மாலையாகி அன்னைக்கு உரிமையாகி விடு கின்றன. படிப்போரையெல்லாம் பரவசத்தில் ஆழ்த்தி விடு கின்றன. அந்த ஆதிமாதாவின் அருளால், தாய்க்கு ஆசிரிய ராகி, தமிழுக்குக் காவலராகி, தேனுகப் பாலாகத் தெளிந்த நல் அமுதாக, பொழுது புலர்ந்தால் பூபாளமாகப் பொழுதெல் லாம் பக்திப் பிரவாகமாக எழுதி எல்லார் இதயத்திலும் இடம் கண்டவர், இடம் கொண்டவர் அண்ணன் வலம்புரிஜான் அவர்கள்.

அவர்கள் தாய்த் திருமொழிக்குத் தாரகமந்திரம். தனக் கெனத் தனிவழி கண்ட எழுத்துப் பறவை. மலைமுகடுகளி லெல்லாம் கூட அன்னைத் தமிழை வாழ வைக்கிற சித்தர்.

அவர் அன்னை மூகாம்பிகையைத் தமிழ்ப் பல்லக்கில் ஏற்றிப் பவனி அனுப்புகிற காட்சியையும் ஏனைய எழுத்துக்களின் மாட்சியையும் காணுகிற பொழுது ஏனோ இவரை எண்ணு கிற போதெல்லாம் காளிதாசன் நினைவே தோன்றுகிறது. "இவன் வருகிறானே! அவன் வருகிறானே!" என்று எண்ணமல் எல்லோரும் வாருங்கள் என்று இதயப் பூரிப்போடு இருகரம் கூப்பி எழுத்துலகில் வரவேற்கின்ற வலம்புரி அண்ணன் பதிப்புலகில் இளைஞனை என்னை அன்புப் பெருக்கோடு ஆசீர் வதித்திருக்கிறார்கள். அண்ணனுடைய நூல் ஒன்றை வெளி

யிட முடியுமா என்ற எதிர்பார்ப்பு, ஏக்கம், இத்தனை விரைவில் தீரும், எண்ணம் செழிப்பாக நிறைவேறும் என்று நான் கற்பனைகூடச் செய்ததில்லை.

நான் தவம் செய்யாமலே அண்ணன் என்னைத் தழுவித் தந்த வரம் இது.

அண்ணன் அவர்களின் அன்புக் கரங்கள் என் மீது பட்டபோதே அம்பாள் அருள் என்னைத் தொட்டு விட்டது என்றே மெய் சிலிர்த்தேன். அதனுல்தான் அந்தக இரவில் சந்தன மின்னல் என்ற அன்னை மூகாம்பிகையைப் பற்றிய இந்த நூல், அந்தக இரவினைக் கிழித்தெறிகிற மணம் மிக்க மின்னலாகவே, ஆனந்த மலர்களாகவே, பக்தி மாலையாகவே உருவாகி இருக்கிறது.

தாய்க்கு ஆசிரியராக இருப்பதோடு தாயுள்ளம் கொண்ட அண்ணன் வலம்புரிஜான் அவர்களை என் சிந்தைதனில் பூக்கின்ற நன்றிப் பூக்களையெல்லாம் எடுத்து அர்ச்சித்து சிரம் தாழ்த்திக் கரம் குவித்து வணங்குகிறேன்.

கங்கை, தானே வந்து நீராட்டுவது போல என் தந்தை புலவர் நாகசண்முகம் அவர்களிடம் அண்ணன் கொண்டுள்ள அளப்பரிய அன்பே அண்ணன் பதிப்பகம் வைத்திருந்தும் அன்னையின் நூல் தமிழ்நாடு பதிப்பகம் மூலம் வெளிவரக் காரணம் ஆகும்! அந்த அண்ணலை, உரைநடை வேந்தரை நோக்கி என்னை ஆற்றுப்படுத்திய என் தந்தையாருக்கு என் ஆழ்ந்த வணக்கங்களைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஓவியர் அமுதோன் அவர்களுக்கும், மாருதி அச்சகத்தாருக்கும், முகப்பு அட்டையினை உருவாக்கித் தந்த பெலிகன் இந்தியா நிறுவனத்தாருக்கும் இந்நூல் உருவாகத் துணை நின்ற பாரதி செல்வனுக்கும் என் நன்றி உரியது.

அருளரசி அன்னை மூகாம்பிகையின் பொற்பாதங்களில் இந்தப் பக்தி மலரைப் பணிவோடு படைக்கின்றேன்.

எங்கள் நற்பணி தொடரும்

**என். எஸ். நாகப்பா**
தமிழ்நாடு பதிப்பகம்.



## நெஞ்செல்லாம் மணக்கிறது

இன்று பௌர்ணமி. செவ்வாய்.
தீபத் திருநாள் வேறு.

கட்டுக் குலையாத இருட்டுப் பொழுதில்
வெளிச்சப் புள்ளிகளை விதைத்த
அந்த ஆதி மாதாவைப் ப்ற்றி
எழுதுகிறேன்.

நான் வெறும் செப்புக்கம்பி.
அவளே மின்சாரம்.

அழுக்குத் தேமலைப் போல அழுந்திக்
கிடக்கிற எனக்கும் அவையில்
இடமும், ஆரவாரமான கைதட்டலும்,
கழுத்து நிறைய மாலைகளும்,
கைநிறையக் காசும்
கிடைக்கிறதென்றால், நான்பேசு
வதால் அல்ல. அவளே நர்த்தகியாய்





நின்று என் நாமேடையில் விரல்
வித்தகம் செய்வதால்தான்.

அந்த மின்சாரம் பாய்கிற மின்மினிப்
பொழுதில் என்னில் சூடும், என்னைப்
படிக்கிற உங்களுக்குச் சுடரும் தென்பட
அவள் அருளால், அவள் தாள் வணங்கி
இதை எழுதலானேன்.

'அந்தக இரவில் சந்தன மின்னல்.'

ஆமாம்; இறுக்கமான இருட்டின்
இளகாத கோரச் சறுக்கலில் வெளிச்சப்
பயிர் வளர்த்த வேத வேள்வியை
இதோ அடங்கிக் கிடக்கிற இந்த கரு
மருந்தில்லாத நெருப்புக்குச்சி, ஊருக்குக்
காட்டுகிறேன் என்று ஊர்வலம்
போகிறது.

ஆரவாரப் பேரலைகளாய் எழுந்தும்
விழுந்தும் அகிலத்தைக் கலங்க
வைக்கிற நீலப் பெருங்கடலை
உலகத்திற்கு அறிமுகப்படுத்தப்
போகிறேன் என்று, காலைப் பனித்துளி
ஒன்று காகிதம், எழுதுகோல்
சகிதம் கால் மேலே கால் போட்டு
உட்கார்ந்து கொண்டிருக்கிறது.



இச்சைக்குரியபச்சைப் பயிர்கள்
இறைந்து கிடக்கிற பூபாகத்தின்



பொன்னிற மணல்மேடுகளை ஒரே
நிமிடத்தில் உண்டு முடித்து விடுகிறேன்
என்று ஒரு மண்புழு மயக்கக் குரல்
கொடுத்துக் கொண்டிருக்கிறது.

சொற்கோலம் போடுகிற அந்தச்
சுந்தரிதான் புள்ளி வைக்கிருள்;
பொட்டுக் கோலமும் போடுகிருள்;
பிச்சிப்பூச் சொற்களை அள்ளி
இறைப்பதும் அவள்தான்; அவற்றைப்
பின்னி முடித்துக் கூந்தல் வீட்டில்
குடியேற்றிக் கொள்ளுவதும்
அவள் தான்.

பரிதியாய்—பால் பொங்கும் நிலவாய்
கோலப்பெருவெளியாய், கண் சிமிட்டும்
மீன்களாய்—விண்கற்களாய்
விரிந்த கோளங்களாய்—வண்ணவான்
பெருங்கடலில் மூழ்கித் திரிந்தும்—
மூச்சை அடக்கித் தவமிருந்தும்
உருளும் வெவ்வேறு
உலகங்களாய்த் தோன்றி,

மறைவதுபோல் மாற்றம்காட்டும்
ஆதி சக்தியை நினைத்தால், அந்த
நினைப்பின் சுகந்த சுகமே,

கோடி கோடி இன்பங்களைப் போரிடாமலே
புறங்கண்டு விடுகின்றது.





நமநமவென்று ஈர நினைப்பில்
இவர்ந்து வரும கோடான கோடி
நட்சத்திரங்களின் ஒளி வெள்ளம்
பாய்ந்து பாய்ந்து பல்லூழிக் காலம்
படர்ந்து கிளர்ந்து இதுவரை
பூமி உருண்டையைத் தொட்டுப்
புல்லரிப்பை உண்டாக்கவில்லை.

இந்த மாபெரும் மாய விளையாட்டை
நினைத்துக் கொண்டே பேரின்பப்
பிரமிப்பு வெள்ளத்தில் மூழ்கித்
திளைக்கிற பொழுதெல்லாம் என்
சரமனத்தின் விடிகாலை இருட்டில்
செவ்வொளி போல ஆதிசக்தியே
விரிந்து வளர்ந்து வேடிக்கை
செய்கிருள்.

கொல்லூரில் குடி கொண்டிருந்து
குவலயப் பந்தைத் தனது
உள்ளங்கையில் உருட்டி விளையாடும்
கோலாபுரி அரசியை—கோல எழில்
கொஞ்சுகிற மாதாவை——நீர்வற்றி—
வயல் வெடித்து—நிலம் கிழிந்து—
வேனில் பருக்களைப் போல
வெடித்துச் சிதறிப் போன ஆற்றுப்
படுகையின் உள்ளும் தேம்பி
இருக்கும் தெண்ணீரைப் போல
என்னைக் காப்பாற்றும் தாயை—
எழுதிக் காட்ட முனைகிறேன்.........





நான் கொல்லூர் செல்லுவது
இது ஆருவது முறை. வேடந்தாங்கல்
பறவையைப் போல, பருவம்தோறும்
அவள் பாதத்திற்குச் சென்று வர
வேண்டும் என்கிற எண்ணம்,
பால் மரக்காட்டில் ஆடித் திரிகிற
அணிலைப் போல எனது
நெஞ்செல்லாம் மணக்கிறது.

சத்தியத்திற்குச் சாட்சி சொல்லுவ
தென்ருல், பூமிப்பந்தில் இந்தப் புருவிற்கு
என்ன வேலை என்பது விளங்கி
விட்டால், அந்தக் கோடசாத்திரி
மலைகளின் குளிரில், அவளது தரிசன
வெள்ளத்தில், காலமெல்லாம் எழுதிக்
கொண்டிருக்க வேண்டும் என்கிற
ஆசை என்னை ஆட்கொள்ளாத
பொழுது இல்லை.

எனது குருச்சேத்திரம் இன்னமும்
தொடங்காத காரணத்தாலேதான்
இந்த அருவி நினைப்பிற்கு இன்னமும்
அனுமதி கொடுக்காமலே இருக்கிறேன்.



கொடுத்து வைத்தவர்கள் அவளிடம்
போகிருர்கள். எனக்கொரு ஆசை.
நான் எழுதி என் 'தாயை'ப் படிக்கிறவர்
களில் லட்சம் பேர்களாவது இந்த ஆதி



சக்தியைக் கண்களால் அள்ளிக்
கொள்ள வேண்டும்.

அந்த வியப்பிற்
குரிய தேவதரிசனத்திற்குத் 'தாய்'
காரணமாக இருந்ததென்ருல், அதை
விடப் பெருமை எனக்கு வேறென்றும்
இல்லை.







## சிங்கத்திலே வந்த சிங்காரி

முதன் முதலாக அருள்மிகு மூகாம்பிகை அம்மனை தரிசிப்பதற்காக நாங்கள் சென்றபோது, பெங்களூர் நண்பர் இராதாகிருஷ்ணன் பெரிதும் உதவியாய் இருந்தார். அவர்தான் கொல்லூருக்குச் சென்று அந்தக் கோலப் பெருவெள்ளத்தில் குதித்து மகிழ இருந்த என்னை மகாலட்சுமி விளாகத்தில் வாழ்ந்து வந்த நாயக் என்பவரிடம் கூட்டிச் சென்றார்.

நாயக் அவர்களின் வரலாறு சொல்லிமாளாத சுவையோடு சேர்ந்தது. நிலவுக் காலங்களில் நீலக்கடல் மடியில் தாயாரின் மடிமீது தூக்கம் வந்தும் வராமலும் இமைகள் பிரிந்தும், பிரியாமலும்





அழகோடு ஒன்றிப் போகிற பிள்ளைகளுக்கெல்லாம் சொல்ல வேண்டிய வரலாறு.

இந்த நாயக் என்பவர் ஒரு பொறி யாளர். ஆண்டவன்பால் நம்பிக்கையே இல்லாதிருந்த இந்த நாயக்கைத்தான் தனது அற்புத ஆடலுக்கு அழகான மேடையாக அம்பிகை தேர்ந்தெடுத் தாள்.

முரட்டுப் பிள்ளைகள் என்ருல் அவளுக் குக் கொஞ்சம் மோகம் அதிகம்; இல்லவே இல்லை என்று இடித்துச் சொல்லிக் கொண்டிருந்த நாயக்கின் இதயத்திலேதான் தனக்கு இடம் வேண்டும் என்று ஆதி சக்தியே நினைத்துவிட்ட போது ஆர் தடுப்பது?

ஆகவேதான், நாயக் எவ்வளவோ மறுத்தும் மறுதலித்தும் அம்பிகை விடாமல் அவரைப் பின் தொடர்ந் திருக்கிருள்.



வீட்டுக்குள் இருந்த பண்ட பாத்திரங்கள் எல்லாம் வெளியிலே வந்து விழுந்து விடுமாம். துணிமணிகள் எல்லாம் கிழிந்து போகுமாம் மந்திரவாதிகள் வந்தார்கள். மாய வேலைகள் எல்லாம் தொடர்ந்தன. இருந்தும் எள்ளளவும்



பலன் இல்லை. இறுதியாக அவரது இறுக்கம் தளர்ந்து போகிற நேரத்திலே தான், ஒரு நாள் வீட்டுக்குள் இருந்து ஒரு சிங்கம் நடந்து போன தடத்தை அவர் பார்க்கிறார்.

அந்தத் தேவ வேளையிலேதான் சிங்கத்திலே வந்தவள் அந்தச் சிங்காரியாகத்தான் இருக்க இயலும் என்பது தெளிவாகிப் போகிறது.

இருட்டுப் பொழுது, வெளிச்சப்பால் வந்து விழுந்ததைப் போல நம்பிக்கை அவருக்குள் குறுகுறுக்கிறது.

இப்பொழுதெல்லாம் அவர் அம்பிகையை நினைத்துத் தனது ஆராதனையைத் தொடங்கியதும், அருள்வாக்கு ஆரம்பமாகி விடுகிறது.

முதன் முதலாகச் சென்ற போது நானும், நண்பர் இராதாகிருஷ்ணனும் சென்றோம். அறிமுகமெல்லாம் முடிந்த பிறகு, நாயக் அவர்கள் எனக்கு நல்லது சொல்ல ஆரம்பித்தார்கள்.



இப்படிச் சொல்லுகிற ஆற்றல் சில அருளாளர்களுக்கு இருப்பதாக நான் உண்மையாகவே நம்புகிறேன்.



மழை வருவதை எறும்பு தெரிந்து
கொள்ளுகிறது; ஊர்வலமாகச் சென்று
மனிதனுக்கு வேறு உணர்த்துகிறது.

நில நடுக்கம் வரப்போகிறது
என்பதை அறிவியல் கருவிகள்
அறிந்து சொல்லுவதற்கு முன்பாகவே
கடல் நண்டுகள் கண்டுபிடித்து
விடுகின்றன.

அதைப் போலவே, வர இருக்கின்ற
நல்லதை, அல்லதைக் கண்டுபிடித்துச்
சொல்லுகிற ஆற்றல் செம்போத்துப்
போன்ற பறவைகளுக் கெல்லாம்
இருந்திருக்கிறது.

எறும்புக்கும் எழுந்து பறக்கிற
பறவைக்கும் எதிர்காலத்தை
உணருகிற—உணர்த்துகிற ஆற்றல்
இருக்கும் என்ருல், ஆற்றல் வாய்ந்த
மனிதர்களுக்கு அது ஏன் இருக்கக்
கூடாது என்கிற கேள்வி என்னை
நெடுநாளாகவே வதைத்துக்
கொண்டிருந்தது.



இப்பொழுது அதற்கான விடை
அங்கங்கே கிடைத்து வருகிறது.
இல்லாவிட்டால், மான்களை
புத்தம்புதுப் புல்வெளிகளுக்கு



அழைத்துச் செல்லுகிற தேவனைப்
போல எதற்காக நான் ஒவ்வொரு
இடமாக அழைத்துச் செல்லப்
படுகிறேன்?

நாயக் அவர்கள் எனக்குச்
சொன்னதெல்லாம் நடந்தது.
என்னென்ன நடந்தது என்பதை
நான் இங்கே விளம்பரப்படுத்த
விரும்பவில்லை.

மூகாம்பிகை ஆலயத்தில் நீங்கள் ஒரு
கருநிறப் பாம்பைக் காண்பீர்கள் என்று
அவர் என்னிடத்திலே தெரிவித்தார்.
என் துணைவியிடத்திலே நான் இதைச்
சொன்னபோது, அவள் இதை
முதலில் பெரிதாக எடுத்துக் கொண்ட
தாகப் படவில்லை. இருந்தாலும் பாம்பு
வருமா? கருத்த பாம்பா? எங்கிருந்து
வரும்? எப்போது வரும்? என்றெல்லாம்
அவள் கேட்டுக் கொண்டே வந்தாள்.

அது முதல் தடவை. நாங்கள்
கோவிலில் இருந்து கொந்தாப்பூருக்குத்
திரும்பிக் கொண்டிருந்தோம். அப்போது
மாலைக் காலமாக இருந்தது. பேருந்தில்
சில பயணிகளே இருந்தார்கள்.





# பாம்பைக் கண்டேன்
# பரவசம் கொண்டேன்

சற்றும் எதிர்பாராத விதமாக, பயணிகள் சிலர் கூச்சலிட்டார்கள். என்னவோ ஏதோ என்று பதறிக் கொண்டு நானும் என் துணைவியும் இறங்கினோம். அங்கே எட்டிப்பார்த்தால்...

இப்போது நினைத்தாலும் உடல் புல்லரிக்கிறது...ஆள் உயரத்திற்கு கறுப்பு வெல்வெட் மாதிரி ஒரு பாம்பு. அவர் சொன்ன அதே காளிங்கன் பாம்பு—தலையை உயர்த்தி வாழ்த்துச் சொல்லுகிற வண்ணமாக வந்து நின்றது. பலருக்கும் கைதூண்டிக் காட்ட முடிந்ததே தவிர—வாய்விட்டு என்னவென்று சொல்ல வரவில்லை.





நாயக்கைத்தான்
நினைத்துக் கொண்டேன். அவர்
குறிப்பிட்டுச் சொன்னதற்கும்,
சற்றேனும் குறைவில்லாமல் இப்படி
நடந்துவிட்டதில் எனக்குள் மகிழ்ச்சி
ஒருபுறம்—அதிர்ச்சி ஒருபுறம்.
இப்போதும் அவர் வருணித்த
பாம்பு என் கண்ணுக்கு முன்பாகவே
களிநடம் புரிந்து கொண்டிருக்கிறது.

இந்தப் பாம்பைக் கண்டேன்; பரவசம்
கொண்டேன் என்று ‘குமுதம்’
இதழில் எழுதினேன். சுதாங்கன்
வந்து சுவையாக ஒன்று சொல்லுங்
களேன் என்றார். இதைச் சொன்னேன்.

குமுதத்தில் வந்த பிற்பாடு இந்த
நிகழ்ச்சியைப் படித்தவர்கள் சிலபேர்,
இப்படி நடந்ததா என்று தொலைபேசி
யில் என்னைத் துளைத்து எடுத்து
விட்டார்கள். இப்படி ஒரு நிகழ்ச்சி
நடக்காமலிருந்திருந்தால் எவராகிலும்
ஒருவர் இதைக் கற்பனையாகச் சொல்லு
வார்களா? அப்படிச் சொல்லுகிற
அவசியம் என்ன வந்தது—
என்றெல்லாம் எவரும் கருதிப்
பார்க்கவில்லை. அவர்களுக்கே நம்ப
இயலாத அதிசயமாக இருந்தால்





என்னைக் கேள்விக்குமேல் கேள்வி யாகக் கேட்டார்கள். கேட்டவர் களுக்கெல்லாம், விரிவாக—விளக்கமாகப் பதில் சொல்லிக் கொண்டிருந்தேனே தவிர, நம்பாமல் இப்படிக் கேட்கிறுர்களே என்று உள்மனம் ஓயாமல் புலம்பிக் கொண்டே இருந்தது.

அம்பாளின் ஆலயத்திற்குப் போனபோது நடந்ததாகச் சொல்லப்படுகிற ஒரு விவகாரத்தை உலகத்தில் எவரும் இட்டுக் கட்டிச் சொல்லமாட்டார்கள் என்கிற நம்பிக்கை பொதுவாக இருக்க வேண்டாமா?

ஒருவேளை இவன் கண்ணில் படுகிற காளிங்கன் நம் கண்ணில் படவில்லையே என்கிற ஆதங்கமே கூடக் காரணமாக இருக்கலாம். எது எப்படி இருந்தாலும் அம்பாள் ஆலயத்தில் நடக்காத ஒன்றை நடந்தது என்று சொல்லுகிற துணிச்சல் எனக்கு அப்போதும் இல்லை... இப்போதும் இல்லை.



குமுதத்தில் நான் எழுதிய சம்பவத் திற்குச் சாட்சியாக என் கூடவே



பேருந்தில் பயணப்பட்ட பலரும் இருக்கிறார்கள். எல்லோருக்கும் மேலாக பத்து வருடத்திற்கு மேலாக எனக்கு உண்மையான உயிர்த்தோழியாக இருந்து வரும் எனது துணைவி இருக்கிறாள். பிறகு ஒருவர் இதை நம்புவதும், நம்பாதிருப்பதும் அவரவர்களைப் பொறுத்தது.

எத்தனையோ கோயில்களுக்குப் போகிறோம்; என்னென்னவோ நேர்ச்சைக் கடன் செலுத்துகிறோம்.

மூகாம்பிகைக்கு இருக்கிற அளவிட இயலாத ஆற்றல் என்ன என்றால்... அவளிடத்திலே கேட்டது கிடைக் கிறது என்பது மாத்திரமல்ல—அவள் ஆலயத்திற்கு ஒரு தடவை சென்றவர் களைப் பல நூறு தடவை வர வைத்து விடுகிறாள் என்பதை அனைவரும் கண்கூடாகப் பார்த்து வருகிறோம்.

கேட்டது கிடைக்காமல், திரும்பத் திரும்ப அந்த ஆலயக் கதவை எவரும் தட்டிக் கொண்டிருக்கவில்லை.



கேட்பதையே மறந்து அவளையே பார்த்துக் கொண்டிருந்தால் மாத்திரமே போதுமானது என்று கருதிப் பலபேர்



தவமாய்க் கிடக்கிறார்கள், அவள்
தாள் திறக்கும் வேளையை எண்ணி.

இப்போதுதான் வரிசையாக
விடுகிறார்கள். முன்பெல்லாம்
விழுந்தடித்துக் கொண்டு ஓடுவார்கள்.
குத்துவெட்டு நடக்கிற இடம்
போல மக்கள் முண்டி அடித்துக்
கொண்டு நாடுவார்கள்.

அந்த அருள்வெள்ளப் பிரவாகத்தில்
துளித் தண்ணீரேனும் கிடைக்காதா...
என்று தங்களையே மறந்து தாவி
வருகிற மக்களை நான் இங்கே
மாத்திரமே பார்த்திருக்கிறேன்.





## தர்ம தேவதையிடம் சொன்ன தகவல்

தொடக்க காலத்தில்
இருந்ததைப் போலவே இந்த ஆலயம்
தொன்மை மாருமலிருக்கிறது.

இருந்தும், அங்கும் இங்குமாகக்
கொஞ்சம் வண்ணம்
பூசப்பட்டிருப்பதைக் கண்டேன்.

அது என்னை என்னவோபோல்
உறுத்திற்று. ஒரு வேளை...அது,
எனக்குள் புதைந்திருக்கிற ஆதி
மனிதனுக்கு விடப்பட்ட சவாலாகவும்
இருக்கலாம்.



கட்டிடம் விழுந்துவிட்டால்—
இடிபாடுகளோடு நிற்பதுதான்...
புராதனம் என்று நான் சொல்ல வர
வில்லை. அதே நேரத்தில், தொன்மைக்



கிருக்கிற அழகை—தொலைத்து
விடுகிற நோக்கத்தோடு, தலைகாட்டுகிற
நவீனங்களெல்லாம் ஆறுவது
விரல்கள் என்றுதான், என்மனம்
சொல்லிக்கொண் டிருக்கிறது.

அங்குமிங்குமாகப் பூசப்பட்டிருந்த
வண்ணம்கூட எனக்கு உடன்பாடாக
இருக்கவில்லை. என் தாய்
மாறுதவளாக இருக்கிறபோது,
அவள் இருக்கிற ஆலயம்
மாத்திரம் மாறுகிறது என்பதை
ஏற்றுக் கொள்வதற்குச் சஞ்சலமாக
இருக்கிறது.

மாட்டுப் பொங்கல் அன்றைக்கு
மாடுகளின் கொம்புகளுக்கு பூசப்படுகிற
முரட்டுத்தனமான சாயம்கூட என்
முகத்தைச் சுளிக்க வைத்திருக்கிறது.

பூவுக்குள்ள மென்மையும், புழுதிப்
புயலுக்குள்ள வேகமும், என்னில்
ஒரு விளையாட்டாகச் சேர்ந்திருக்கிறது.



நாங்கள் எப்பொழுது சென்றாலும்,
மூர்த்தி கணேஷ் பட் அவர்களின்
இல்லத்தில்தான் தங்குவது வழக்கம்.
காலங்காலமாக உற்சவமூர்த்தியான
அம்பாளை அவர் தம் கைப்படவே
தூக்கிச் சுமந்து ஆலயத்தை வலம்வரும்



உரிமை பெற்றவர். ஆகவேதான்—
அவருக்கு மூர்த்தி கணேஷ் பட் என்கிற
பெயர் வந்தது.

அவருக்கு உடம்புக்கு இயலாத
நேரங்களில் மற்றவர்கள் சுமக்கிறுர்களே
தவிர, அவர்தான் சுமக்க வேண்டு
மென்பதில், அவரைப்போலவே பக்தர்
களும் பெரும் விருப்பத்தோடு இருக்
கிறுர்கள் என்பதை, நான் பலமுறை
பார்த்திருக்கிறேன்.

அவர், அந்த மூர்த்தியைத் தாங்கிக்
கொண்டு வருகிற நேரத்திலெல்லாம்,
ஒரு குழந்தையை வாரியணைத்துக்
கொள்கிற குதூகலத்தோடுதான்
காணப்படுவதைப் பார்க்கிறோம்.

என்னவோ ஏதோ—பார்த்ததும் அவர்
உருவம் என்னில் பதிந்து விட்டது.
அதற்கொரு ஆழமான காரணம், அவர்
என் தந்தையார் போல இருக்கிறுர்.

அவர் மொழி வேருக இருந்தாலும் முகம்
ஒன்ருகவே இருக்கிறது. சின்னதில் என்
பெற்ருேர்களை நான் இழந்துவிட்டதால்
அவரைப் பார்த்ததும்—களைத்துப்
போன இமையின்மீது, களைத்துப்
போன இமை விழுவதைப் போல,





அவரோடு சேர்ந்து கொண்டேன்.
அவர் இருப்பதால்தான், என்
போன்றவர்களுக்கு ஒழுங்கான
தரிசனமே கிடைக்கிறது. இல்லா
விட்டால்—அந்த ஆரவார அலைகடலில்,
எங்களைப் போன்ற மணல்வீடுகள்
அஸ்திவாரங்களைத் தேட வேண்டிய
அவசியம் வந்துவிடும்...!

பிராப்தம் இருக்கிறவர்கள் எல்லோரும்,
எப்படியோ இந்த ஆலயத்திற்கு
வந்து விடுகிறார்கள். இருந்தாலும்
தமிழக முதல்வர், புரட்சித் தலைவர்,
கொடுத்த வாள் அன்னையின்
கரத்தில் அணியாய் மின்னுகிறது.
அவரும் எப்போதோ ஒருமுறை இங்கே
வந்து போகிறார்... என்று தெரிந்த
பிறகு, இங்கு வருகிற மக்களின்
எண்ணிக்கை அதிகமாகி இருக்கிறது.

இது முலாம் பூசப்படாத முற்றான
**உண்மை!**



வடக்கில் அந்தத் தாய் அவர் தந்த
வாள் ஏந்திக்கொண்டிருக்கிற
காரணத்தால்தான், தெற்கே அவரது
பகைவர்கள், அவரது தாளேந்திக்
கொண்டிருக்கிறார்கள்.



இந்தச் சூட்சமம் தெரியாத சூனியக் காரர்கள், மண்புழுக்களால் மன்னிக்கப் படவேண்டியவர்கள்...!

நான் செல்லுகிற போதெல்லாம், அவருக்காக அர்ச்சனை செய்வது வழக்கம். இது எனது பிராயச்சித்தம். நாம்தான் அவருக்காக அர்ச்சனை செய்கிறோம் என்று நினைத்தால், நம் மாதிரியே பலரும் அவருக்காகச் செய்கிறார்கள்—அவருக்காக வேண்டுதல் நடத்துகிறார்கள் என்கிற விபரம், என்னைப் புல்லரிக்க வைத்தது.

இப்படித்தான் போன வருடம் அவருக்கு வேண்டுதல் நடத்திக் கொண்டிருந்த போது, அதற்கும் முன்னரே பலரும் அவருக்காக அந்தத் தர்மதேவதையிடம் தகவல் சொல்லி யிருக்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொண்டேன்.

அவர்களில் ஒருவர்தான் டைரக்டர் கே. சங்கர்.





## தகரத்தைத் தங்கமாக்குகிற தயாபரி

அப்போது டைரக்டர்
'தாய் மூகாம்பிகை' படம்
முடித்திருந்தார். அந்தப்
படப்பெட்டியை அம்பாளின்
ஆற்றல்மிக்க பாதத்தில் வைத்து
எடுத்து விட்டால், அந்தப்படம்
வரவேற்கப்படும் என்கிற அவரது
நம்பிக்கை, எனக்கு ஒரு புல்லரிப்பை
உண்டாக்கி விட்டது.

எல்லாம் நடந்து, எல்லாம் முடிந்த
பிறகும் உலகத்தைக் காப்பாற்றுகிற
அந்த உத்தமியிடம் இருந்து தானே
உத்தரவுக்காக எல்லோரும்
எதிர்பார்த்துக் கொண்டிருக்கிருர்கள்!
இதுதான் அவளுக்கு இருக்கிற
பேராற்றல்!





அவர் நாட்கணக்கில் அங்கே தங்கி இருந்து, அம்பாளை வணங்கி வழிபட்டுக் கொண்டிருந்தார். அவர் எடுத்த படம் எப்படி இருந்தது என்பதல்ல—அந்தப் படம் தாய் மடியில் இருந்து தவழ்ந்து வந்ததால் அதற்குப் பலன் இருந்தது என்பது பலருக்கும் தெரிந்தது.

அவரைப் போலத்தான் நம்பிக்கை கொண்டு அவளை நாடி வருகிறவர்களை அவள் என்றைக்கும் கை விட்டதில்லை. எனக்குத் தெரிந்து எத்தனையோ கலைஞர்கள், கவிஞர்கள், எழுத்தாளர்கள், ஆற்றலாளர்கள் எல்லாம் இங்கே வந்த பிறகுதான் அவர்களை உலகம் அடையாளம் தெரிந்து கொண்டிருக்கிறது.

ஒருகாலத்தில் 'இது இசையா, இது பாட்டா' என்றெல்லாம் கேட்டவர்களை, 'இது அல்லவா இசை! இது அல்லவா பாட்டு!' என்று பாராட்டுகிற அளவிற்கு மாற்றி விடுகிற மந்திரசக்தி, இங்கே குடி கொண்டிருக்கிற ஆதிசக்திக்கு அபரிமிதமாகவே இருக்கிறது.





நேற்றுப் பழுத்த இலை என்று
ஒதுக்கப்படுகிற ஒன்று, இன்றைக்குத்
துளிர் இலை என்று தூக்கப்படுகிறது
என்றால், அவள் அருள்தானே
காரணம்!

இல்லாவிட்டால், வீட்டுக்கும்
வெளியிலே நிறுத்தப்பட்டவர்கள்
நாட்டுக்குத் தெரிந்தவர்களாக
மாறுவதற்கு என்ன காரணம்?

தகரத்தைத் தங்கமாக்குகிற
வித்தக வியப்புச் சக்தி இந்த அற்புத
மண்ணுக்கு அதிகமாகவே
இருக்கிறது.

இல்லாவிட்டால், நாளும் பொழுதும்
இப்படி ஆயிரக்கணக்கில் மக்கள்
அலைமோதுவார்களா?

அருள்மிகு மூகாம்பிகை அம்மனுக்கு
இருக்கிற அடிப்படைச் சிறப்பை
நான் இங்கே சொல்ல வேண்டும்.
நான் இந்தத் திருத்தலத்திற்கு வந்த
பிறகுதான் நம்பிக்கை எனக்குள்
துளிர்விட்டது.



எதற்கெடுத்தாலும் அப்பளப்பூ
கொப்புளத்தைப் போல அடிக்கடி



நொறுங்கிப் போகிற எனது மனது
அளவற்ற தன்னம்பிக்கை பெற்று
இறுக்கமானது இங்கேதான்.

ஒரு காட்டு எருமைக்கு உள்ள
வேகமும், ஒரு கலே மானுக்கு
உள்ள தாகமும், அசையாமல்
இருக்கிற ஆமை போல
நம்பிக்கைகளேச் சுவாசிக்கிற நல்ல
குணமும், இந்த மண் எனக்குத்
தந்தவை!

சங்கீதத்திலே ஒரு பாடல் வரும்:
"ஆண்டவரே எனது நல்ல மேய்ப்பன்.
அவர் புதிய புல்வெளிகளுக்கும்,
புத்தம்புது நீரூற்றுகளுக்கும் என்னே
அழைத்துச் செல்கிருர்."
என்பதே அது. விதியின் கரம்
எப்படி வியக்கத்தக்க முறையில்
மனிதனே அழைத்துச் செல்லுகிறது
என்பதை நான் இந்த மண்ணில்
நன்ருகக் கண்டேன்.



பக்கத்தில் இருந்தும் இந்த ஆலயத்தைப்
பாராதவர்கள் உண்டு. தொலேவில்
இருந்தும் இதை எண்ணிக் கொண்டே
இருக்கிற ஆன்மாக்களும் உண்டு.
எல்லாமே ஏற்கனவே தீர்மானமாகி
விடுகிறது என்ருலும், இந்த ஆலயத்திற்கு



வருவது என்பது மாத்திரம் 'கொடுப்பினை' இருந்தால்தான்.

இப்படி எழுதுகிற என்னை பகுத்தறிவு வாதிகளுக்குப் பரிகாசம் பண்ண வேண்டும் என்று தோன்றும்.

பாலைப் பொழிகிற பருவ நிலவை, ஆடிக் கழிக்கிற நீல அலைகடலை, ஆயிரமாய் பூக்கிற அழகழகு முல்லைகளை, விழிகளே இல்லாதவன் விரும்பவில்லை என்பது அவன் குற்றமல்ல. இவர்கள் திருநாள் கூட்டத்தில் தொலைந்து போன குழந்தைகள்.

ஆகவே, இவர்களுக்கு ஆளுக்கு ஆள் பொம்மை வாங்கிக் கொடுத்துப் பொழுதைக் கழித்துக் கொண்டிருக்க நம்மால் ஆகாது.

ஒரு பெண், குழந்தையைப் பிரசவிக்கிற போது உருவாகிற வலியை எப்படி எடுத்துச்சொல்லி ஒரு ஆடவனுக்கு உணர்த்துவது? அதைப் போலத்தான் இந்த ஆதி மாதாவின் அற்புதங்களை எடுத்துச் சொல்லி எவருக்கும் விளங்க வைப்பது இயலாத காரியம்,





தொலைந்து போன ஒரு கிராமத்தைப் போல ஆரண்யத்தின் கொள்ளை வனப்பு ஆரோகணித்திருக்கிற இந்தக் கொல்லூர், அழகான மலைகளால் சூழப்பட்டது.

அதில் ஒன்றுதான் குடசாத்திரி மலை!







# காவிரியில் புனித மாய கங்கையில் புனித மாயது

குடசாத்திரி மலை ஏறிட்டுப் பார்க்கிற
அளவிற்கு உயரமாக இல்லா
விட்டாலும், எட்டிப் பார்க்கிற
அளவிற்கு எழுந்து நிற்கிறது.

கூதலும் குளிருமாக ஈரவாடை
உடலை வருடுகிறபோது உண்டாகிற
ஒரு நளினப் புளகாங்கிதம் எப்போது
நினைத்தாலும் உள்ளத்திற்குள் ஒரு
குறுகுறுப்பை கொட்டி விடுகிறது.

உயரமான மலைகளைப் பார்க்கிற
போதெல்லாம் உள்ளுக்குள் எனக்கு
மாத்திரம் அல்ல—எல்லோருக்குமே
ஒரு கிளர்ச்சி உண்டாகும். உயரம்
உன்னதத்தைக் குறிக்கிறது. நிமிர்ந்து
நிற்கிற பர்வதங்கள் வீழ்ந்து கிடக்கிற





மானிடத்தை நிமிர்த்தி வைக்கிற
நித்தியங்கள்.

அருள்மிகு மூகாம்பிகை அம்மனின்
ஆலயத்திற்கு வருகிறவர்களுக் கெல்லாம்
கருநாடகத்திற்கு வருகிற
உணர்வே வருவதில்லை. மாறுக,
கேரளத்துக்குள்ளே நடமாடுகிற
நினைவே வருகிறது.

தென்னை மரங்கள் குறைவாக
இருக்கலாமே தவிர கேரளத்
தென்றல்தான் அம்பாளின் ஆல
யத்தைக் கும்பிட்டுத் தொழுகிறது
என்பது மாத்திரம் தெளிவாகிப்
போகிறது. அப்படி ஒரு நெகிழ்ச்சி
அங்கே.

புராதனமான கேரள அரண்மனைக்
குள்ளே நுழைகிறபோது
உண்டாகிற குதூகலமே அம்பாளின்
அருளாலயத்திற்குள்ளே
நுழைகிறபோது உருவாகிறது.



எப்போதோ ஒரு வேளை முரசு
முழங்குகிறது; மணி அடிக்கிறது;
இரண்டு சப்தங்களும் செவி
மேடைகளில் செம்மாந்து விழுகிறபோது
நூற்றுக்கணக்கான ஆனைகள்



புறப்படப் போகிறபோது
உண்டாகிற எழுச்சியே
ஏற்படுகிறது.

ஒவ்வொரு நாளும் பொங்க வைத்துப்
பார்க்கிறவர்கள், ஒரு நாள் பொங்கி
வழிவதைப் பார்த்து பூரித்துப்
போகிறார்கள். அதைப் போலத்தான்
தங்கள் தங்கள் வீடுகளில் அம்மனை
நினைத்து அன்றாடம் உள்ளுருகிப்
போகிறவர்கள், ஒரு நாள் அவள்
அருள் வெள்ளம் பொங்கி
வழிவதைப் பார்க்கவே இந்தக்
குடசாத்திரி மலைக் கோயிலுக்கு
வருகிறார்கள்.

அவளை அம்மன் என்று
அழைக்கிறோம். இப்படி ஆண்டுக்
கணக்கில் அம்மன்—அம்மன்
என்று அழைத்து மகிழுவதற்கு
ஒரு காரணம் இருக்க வேண்டுமல்லவா?



அம்மா, அப்பா என்கிறோம்.
அம்மா என்பது ஈரம், அப்பா என்பது
வீரம். 'அம்' என்கிற பகுதியிலே
தொடங்கி 'அன்' என்கிற—
'அவன்'—'இவன்' போன்றதான
ஆணுக்குரிய விகுதியிலே முடிகிறது.



'அம்' என்ற அழகான பகுதி
பெற்று, 'அன்' என்ற ஆரோகண
வீர விகுதி பெற்று நிற்கிருள்
அம்பாள். விஞ்சி நிற்கும் வீரம்
கருதியே வியத்தகு பெருமாட்டியை
'அம்மன்' என்று அழைக்கிரேம்.

கற்பகோடி காலம் வாழும் காளியாய்
சிலம்பில் நடை பழகும் பூங்கண்
இயக்கியாய், கல்விக்கரசியாய்,
களிப்பருளும் கற்பகத்தருவாய்
வாழும் என் தாய் கொல்லூரில்
ஈரமே மிகுந்து இதயம் கனிய
வாழுகிருள்.

முன்பெல்லாம் மூர்த்தி கணேஷ் பட்
அவர்கள் தான் முன்னின்று
வருகிறவர்களுக்கு வழிபாடு நடத்தி
வந்தார்.

இப்போது அவரது வாரிசாக
உருவாகி வருகிற மைந்தன்
காளிதாஸ், இளமை நலம் பொங்கும்
இனிய ஞானத்தோடு, தந்தையை
நாடி வரும் பக்தர்களுக்கு உதவிக்
கொண்டிருக்கிருன்.



அம்பாளை நாடி வருகிற ஆயிரக்
கணக்கான பக்தர்களுக்கு அமுது
படைக்கிற அன்னையாக விளங்குகிறவர்



மூர்த்தி கணேஷ் பட் அவர்களின் துணைவியார்.

செல்விருந்து ஓம்பி, வருவிருந்து பார்த்திருக்கும் அற்புதமான இந்தத் தாயின் அரவணைப்பு இதமானது; இதிகாசச் சிறப்பு மிக்கது.

அன்னையைத் தேடி வருகிற இத்தனை பக்தர்களுக்கும் அமுதுபடைக்கிற இந்த அற்புதம், ஒவ்வொரு நாளும் நடந்தேறி வருகிறது.

இத்தனை அன்போடு எத்தனை பக்தர்கள் வந்தாலும் உண்டி கொடுத்து உபசரிக்கிற மூதின் மணிமேகலையைக் கொல்லூரிலேதான் காணலாம்.

வேதங்களில் காணப்படும் வேள்விப் புகைபோல எப்போதும் எரிந்து கொண்டிருக்கும் அடுப்பு—இயந்திர கதியில் ஈரமாய்க் கசிந்து கொண்டிருக்கும் அன்பு—இவர்களைப் பார்ப்பதும் ஒரு பரவசமே. இந்த ஆலயத்துக்கு வருகிறவர்கள் காலை விடிந்தால் கால் பதிக்கும் இடம் சௌபர்ணிகா நதி. இதன் வரலாறு புனிதமானது. இது காவிரியில், புனித மாய கங்கையில் புனிதமாயது...





## உயர்ந்த சிந்தனைகள்!
## ஒப்பரிய மந்திரங்கள்!

உயர்ந்து நின்று, உள்ளத்தைத்
தூக்கி நிறுத்துகிற குடசாத்திரி மலையில்
கண்டெடுக்க முடியாத காட்டு
மூலிகைகள் எத்தனையோ?
அவற்றிலே விழுந்து புரண்டு
கீரிப்பிள்ளை போல கீழிறங்கி வருகிறுள்
சௌபர்ணிகை.

ஆலயத்திற்கு வருகிறவர்கள் அழகு
கொழிக்கிற இந்த அற்புத நதியில்
விழுந்து புரளாமல் இருக்க
மாட்டார்கள்.

மந்திர ஒலிகளோடும், மயக்க
வைக்கின்ற பேரழகோடும், பொங்கித்
ததும்பி வருகின்ற சௌபர்ணிகையில்
மூழ்கிக் குளிக்கிற போதெல்லாம்
உலகம் மறந்து போகும்!





வெள்ளத்தை எதிர்கொண்டு
வீரியமாய்ப் போகிற சின்னஞ்சிறு
மீன்களின் கூட்டம் செதில்
செதிலாக அழகினைச் சிந்தாமல்
சிந்தும்.

குளிக்கிறபோது கூடி நின்று
அவைகள் நம்மைக் கொஞ்சம்
கடிப்பதே கூட இதமாகவும்,
இன்பமாகவும் இருக்கும்.

ஆடு இறந்தால்கூட அதற்கொரு
மதிப்பு இருக்கிறது. ஆள் இறந்தால்
தான் பிணம் என்று பெயர் வைத்து
விடுகிறார்கள். வாழுகிறபோது
எதற்கும் உதவாத இந்த உடலும்
அந்த சின்னஞ்சிறு மீன்களுக்குச்
சிலிர்ப்பை உண்டாக்கவாவது பயன்
படுகிறதே என்பதில் ஒரு ஞான
கர்வமே உண்டாகிறது.



மகாரண்யம் என்று பனுவல்கள்
எல்லாம் உச்சிமேல் வைத்து மெச்சிப்
புகழுகின்ற குடசாத்திரி மலையின்
கும்பியில் இருந்து, குனிந்து நெளிந்து
வரும் சௌபர்ணிகை ஆற்றின் தீரத்தில்
இன்றும் தவம் இயற்றிக் கொண்டிருக்
கிறார் கோல மகரிஷி.



"இன்றும் தவம் இயற்றுகிறாரா?" என்று விலா நோகச் சிரிக்கிற விரியன் பாம்பின் குட்டிகளுக்குச் சொல்லுகிறேன்: மனிதர்களுக்குச் சாவு; மகான்களுக்குச் சமாதி.

சமாதி காணுகிற சரித்திர மனிதர்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பது ஒப்புக்காகச் சொல்லப்படுவது அல்ல. உண்மையே அதுதான்.

போக முனிவர் பொங்கி அடங்கி இருக்கிற பழனித் திருத்தலத்திற்கு இப்படித்தான் ஒரு பெருமை உண்டானது.

உலக நலனுக்காக உட்கார்ந்து தவம் இயற்றிக் கொண்டிருக்கிறார் கோல மகரிஷி. தனக்கென்று கேளாத தவஞானி அவர்!

பிறவாமை வேண்டும் என்றும் கூடக் கேளாத பேராளர் அவர்!
உலகம் உய்யவேண்டும் என்று கேட்கின்ற உயர்ந்த சிந்தனைகள் அல்லவா நமது ஒப்பரிய மந்திரங்கள்!



"வேண்டப்படுவது அறிவோய் நீ!
வேண்ட முழுதும் தருவோய் நீ"
என்றெல்லாம் பேசுகிற சமயத்தின்



ஆதி அரசர்களிலே ஒருவர்
அல்லவா அவர்!

கற்றைச் சடை வளர்த்து, கல்லிலும்
முள்ளிலும் கால் கடுக்க நின்றிருந்து,
ஊனும், உறக்கமும் தவிர்த்து,
உள் மனத்தின் ஆழத்தில் ஒடுங்கி,
ஓங்காரத்தின் உட்பொருளில்,
தம்மைக் கரைத்துக் கொண்டிருக்கிற
அந்தத் தர்ம தேவதைக்கு முன்பாக
கல்லுக்குள் தேரைக்கும் களிப்பருளுகிற
பரமேசுவரன் தோன்றுகிறார்.

"உலகம் உய்வதற்காக நான் தவம்
இயற்றிக் கொண்டிருக்கிறேன்,
அதற்குப் பேரருள் பெருந்துணை
செய்ய வேண்டும்" என்று ஆற்றாது
அரற்றுகின்றார் கோல மகரிஷி.

"இந்தத் திருத்தலம் ஆதி சக்தியின்
அருள் வலிமையால் அற்புத மண்
என்று அகிலம் வியக்க ஆரோகணிக்கப்
போகிறது. ஆகவே கோல
முனிவனே! குணக்குன்றே!
எப்பொருளிலும் உறைகின்ற ஆதி
சக்தியைக் கைதொழுவாயாக'
என்று சொல்லிவிட்டு விடை
ஏறு பாகர் நடை நடந்து
விடுகிறார்.





அத்தோடு இல்லாமல் வல்லமை
வாய்ந்த ஸ்ரீ சக்கரத்தை எழுந்தருளச்
செய்கிறார்.

கடும் தவத்தில் கரைந்து கொண்டிருந்த
கோல மகரிஷிக்கு முன்பாக
கம்காசுரன் தோன்றுகிறான்.

அவன் சக்தியின் ஒரு அம்சமான
கால பைரவியின் காந்த சக்தியைப்
பெற்றவன், குடசாத்திரிமலையின்
எழிலிலும், சௌபர்ணிகை நதியின்
சங்கீத மொழியிலும் அவன் தன்னை
இழந்து அங்கேயே தங்கி
விடுகிறான்.

கால பைரவியின் கடும் தவக் கூறாக
அவன் இருந்தும் ஆற்றலை வெளிப்
படுத்தி அக்கிரமங்களில் மூழ்க ஆரம்
பித்து விட்டான்.

அவனது அகோரச் சேட்டைகள்
கோல மகரிஷியின் வேள்வி நெருப்பில்
வியர்வையை வழித்தன.

குடசாத்திரி மலையின் குகை ஒன்றில்
கோல மகரிஷி அடைக்கலம் தேடுகிற
அளவிற்கு கம்காசுரனின் அக்கிரமம்
உச்சத்திற்குச் சென்றது.





மன்னவர்களை மயங்கித் தவிக்க
வைத்த அந்த கம்காசுர அரக்கன்
விண்ணவர்களைக் கூட விடவில்லை.

திக்கித் திணறிய தேவர்கள்
முறையிடுவதற்காக மும்மூர்த்திகளிடம்
சென்றுர்கள்.

அவர்களோ காலபைரவியின்
கடும் கூருக விளைந்த கம்காசுரனை
அழிப்பதற்கு, சக்தியே சிறந்தவள்
என்று உலக மகாசக்தியைக்
கைதொழுதனர். இந்நிலையிலே தான்
பேரண்ட ஞாயிற்றின் பெரும்
பிழம்பான ஆதிசக்தி தனது
மற்றொரு அம்சமான திரிபுர பைரவியை
கம்காசுரன் வாழ்ந்த திக்குநோக்கிச்
செல்லுமாறு தீர்ப்பிட்டாள்.





## செய்வதறியாது திகைத்தான்
## செந்தழலாய்க் கொதித்தான்

இருட்டைக் கிழிப்பதற்காக கிழக்கு வானத்தில் இருந்து கீழிறங்கி வருகிற வெளிச்ச பூபாளத்தைப் போலத் திரிபுர பைரவி விரைந்து வருகிருள்.

கம்காசுரன் தப்பித்தால் போதும் என்று தலைதெறிக்க ஓடிக் கொண்டிருக்கிருன்.

வேத மந்திரங்களும், விளைந்த ஞான அருள் ஒலிகளும், நீக்கமற நிறைந்து இருக்கிற ரிஷிய முகாசலம் என்கிற ஆரண்யத்தை அவன் அடைகிருன்.



வேத மந்திர ஒலிகளால் விளைந்த பெரு ஞானம் ஆரோகணித்திருக்கிற அழகான இந்த ஆரண்யத்தை கம்காசுரன் தேர்ந்தெடுத்ததற்குக்



காரணம்—திக்கு நோக்கித் திரண்டு வருகிற கால பைரவி இந்த இடத்தை இடர்ப்படுத்த மாட்டாள் என்கிற இறுக்கமான நம்பிக்கை தான்.

தேவர்கள் எல்லாம் திரண்டு எழுந்து ஒரு பக்கத்தில் கம்காசுரனை அடக்கு மாறு ஆதிபராசக்தியை அடிதொழுத வண்ணம் இருக்கிறார்கள்.

இந்த விண்ணப்ப வெள்ளத்தில் களிமண் உருண்டை போலக் கரைந்து அழிந்து விடக் கூடாதே என்பதற்காக ரிஷிய முகாசலத்தில் ஒளிந்திருந்த கம்காசுரன் நான்முகனைக் கைதொழத் தொடங்கி விட்டான்.

வல்லமை படைத்த அவனது வார்த்தை கள் வானம் எல்லாம் நிரம்பின.

தேவர்கள் இதைப் பார்த்தார்கள். படைப்புக் கடவுள் ஒரு வேளை கம்கா சுரனுக்கு வரம் அருளிவிட்டால் தங்கள் கோரிக்கைகள் குலைந்து போகுமே என்று தேவர்கள் கவலைப்பட ஆரம்பித் தார்கள்.



பிரம்மதேவன் வரம் அளித்து விடக் கூடாதே என்று வருத்தம் தோய தேவர்கள் எல்லாம் திரண்டு



எழுந்து ஆதிசக்தியிடத்திலே
அழுதார்கள்

உன்னிடம் இருந்து அருள்
பெற்றவனை உலகத்தில் வெல்லுவதற்கு
உன் ஒருத்தியால் மாத்திரமே
இயலும் என்று அவர்கள் சொல்லத்
தலைப்பட்டார்கள்.

அனைத்தும் அறிந்தவள் அம்பிகை.
ஆகவே ரிஷிய முகாசலத்தில் அவன்
தவம் இயற்றிக் கொண்டிருக்கிற
காலம் வரை அவனை அழித்தல்
ஆகாது என்று அறிந்து கொண்ட
அன்னை, கம்காசுரனை அழிப்பதால்
அந்த புனித மலை மாசுபடும்
என்று தேவாதி தேவர்களுக்கு
எல்லாம் தெளிவாகவே தெரிவித்தாள்.

தர்மங்களை மறைத்து, தபோவனங்களை
அழித்து, தார்மீக நெறிகளைக்
குலைத்து, பூமிப்பந்தினை உள்ளங்கை
தனில் உருட்டி விளையாடுகிற
நிலைக்கு வந்துவிட்டான் கம்காசுரன்.

அவன் சாகாவரம் பெற்றுவிட்டால்
உலகத்தின் சரித்திரமே மாறிவிடும்.
ஆகவே அம்பிகை அருளித்தான்
ஆகவேண்டும். இல்லா விட்டால்
அஞ்ஞான வெள்ளம் உலகத்தை





அடித்துக் கொண்டு சென்றுவிடும்
என்றெல்லாம் ஆதங்கப்பட
ஆரம்பித்துவிட்டார்கள் தேவர்கள்.
இந்த நேரத்திலேதான் எல்லா
உலகங்களுக்கும் எழில் அரசியாக
விளங்குகிற அந்த அன்னை
மனம் இரங்கி உற்ற காலத்தில்
உதவுவேன் என்று உறுதி தந்தாள்.

கம்காசுரனின் தவமோ கடுமை
யானது. கண்டோர் கேட்டோர்
எல்லோரும் விழிப்புருவங்களை
வில்லாக்கினர். அண்ட சராசரங்கள்
எல்லாம் அதிர்ந்தன.

இப்படி ஒரு தவமா? என்று எல்லோரும்
மூக்கின் மேல் விரலை வைத்து
ஆச்சரியத்தில் ஆழ்ந்தினர்.

அந்த நேரத்திலே தான் எல்லாருக்கும்
எல்லாமுமான எழில் அன்னையின்
நினைவும் அவர்களுக்கு வந்தது.

பருவமழை தவறலாம். பால் நிலா
ஒளி தர மறுக்கலாம். பாற்கடல் ஒலி
எழுப்பாது ஒடுங்கலாம். கோள் நிலை
மாறலாம், குன்றுகள் எல்லாம் குலைந்து
வீழலாம், இருந்தாலும் அன்னை சொல்
மாறுவதில்லை, அவள் என்றைக்கும்
மாறுதவள். நம்பி வந்தவர்கள் நாச





நினைப்பு இல்லாதவர்களாக
இருந்தால் போதும். நாளெல்லாம்
அவளைத் தொழாவிட்டால் கூட
அவர்களைத் தூக்கி நிறுத்தி, தொல்லை
அகற்றிக் காப்பாற்றுகிறாள் என்பதை
உலகம் உணர்ந்து கொண்டிருக்கிறது.

இந்தப் பேருண்மை பெரிதும்
விளங்குவதற்காகவோ என்னவோ
ஆதிபராசக்தியாக இருக்கிற
அம்பிகை தன்னை, தன் இருப்பை
உலகத்தார்க்கு அவ்வப்போது காட்டி
வருகிறாள்.

அப்படித்தான் தேவர்களின்
வேண்டுகோளும் கேட்கப்படுகிற
ஒரு நாள் வந்தது. கம்காசுரன்
உச்சமான ஒரு தவத்தில் இருந்த
போது பிரம்மதேவர் அவன்
முன்பாக எழுந்து வந்தார்.

'வேண்டும் வரம் கேள்' என்று
அவர் கம்காசுரனுக்குச் சொல்லுகிற
போது எவ்வளவோ ஆவலாக
நினைத்ததை கேட்க வேண்டும் என்று
நிமிர்ந்த கம்காசுரனுக்கு நா பேச
இயலாது போயிற்று.



தானே நர்த்தகியாக நின்று நா
மேடைகளில் நாட்டியம் ஆடுகிற



அந்த நங்கை நல்லாள், கம்காசுரனைப் பேச ஒட்டாமல் ஆக்கி விட்டாள். அவளே அவன் நாவில் அமர்ந்து விட்டாள். அந்த அரக்கன் எவ்வளவோ முயன்றான். நாவாட இயலவில்லை.

இப்படி அவனை ஊமையாக்கிய உமையவளை மூகாம்பிகா (மூகம்—ஊமை) என்று உலகம் வழங்கலாயிற்று.

வெளிச்சத்திற்கு இருக்கிற பலத்தை விட இருட்டுக்கு இரட்டிப்பு பலம் தற்காலிகமாக இருக்கிறதல்லவா?

சில நாட்கள் சென்றன. கம்காசுரனின் சினத்தீ வளர்ந்தது. அவன் செய்வதறியாது திகைத்தான். செந்தழலாய்க் கொதித்தான்!





## "தாய்" படித்த பிறகன்றே தாய் இருப்பது தெரிந்தது

கம்காசுரன் கோபம் கொண்டதால்
கொடுமை விளைந்தது. நான்முகன்,
திருமால், இந்திராதி தேவர்கள்
அனைவரும், "அம்பிகையே!
ஆதிபராசக்தி தாயே!
அனைத்தும் அறிந்தவளே!
அகிலத்தை அளந்து அகிலத்திற்கே
அளிப்பவளே" என்று அவளைத்
தொழுது வணங்கினர். துயரம் விடை
பெறுகிற வேளை வந்தது.

'செங்கண்மால் தங்கச்சியே' என்று
அபிராமிபட்டர் வாழ்த்துகின்ற,
என் பெருமாட்டி சிரித்த எழிற்சிரிப்பில்
அண்டம் குலுங்கிற்று. ஆதிசேடன்
நடுங்கினன். அம்மை ஓங்காரக்
காளியாய் உருமாறி கம்காசுரனை





வதைத்தாள். ஆனந்த வாரிதியான அம்பிகையால் வாழ்த்தப்படுகிறவர்கள் மாத்திரமல்ல; வதைக்கப் படுகிறவர்களும் வரலாருகிருர்கள். அப்படித்தான் நொடிந்து நொறுங்கிப் போன கம்காசுரனுக்கும் அம்மை அருள் புரிந்தாள். கம்காசுரனை அழித்த இடத்தில் கால் கொண்டு நிற்க வேண்டுமென்று மாயம் கடந்த மகிழ்ச்சிப் பெருவெளியை, கோலம் கடந்த குண நிதியை, கங்கை அண்ணலுக்கு இடப்பாகம் தந்தாளை, காவிரியில் சலசலத்து வருவாளை தேவர்கள் மாத்திரம் வேண்டவில்லை. கம்காசுரனும் வேண்டித் தன் கதை முடித்தான்.

இன்றும் கொல்லூர்த் திருத்தலத்தில், அம்பிகைக்குத் திருவிழாவும், கம்காசுரனுக்கு பெருவிழாவும் நடக்கிறது. பழுப்பு இலை உதிர்ந்த பிறகு அடிமரத்திற்கு ஆதார மாவதைப் போல எரிந்த மத்தாப்பு மீண்டும் எரியக் கரியாவது போல, கம்காசுரனும் வீழ்ந்து நிலைத்தான்— விதைபோல; விறகுபோல. காயழல் ஏந்திய பித்தன் தன்னை காதலிக்கின்ற எங்கள் அன்னை பிழை செய்தவனைப்





பொறுக்கின்ற பேரறம் வாய்ந்த பெருமாட்டி அல்லவோ? ஆகவே, அம்மை மனம் கனிந்தாள். அடிபரவிய கம்காசுரனைக் காத்தாள். அவன் வாழ்க்கை முடிந்தபோது வரலாறுகி விட்டான்.

நல்லதும் கெட்டதும் ஒன்றும் இல்லை. நல்லதே கெட்டது; கெட்டதே நல்லது—என்கிற பேருண்மைக்கு பெருவிளக்கமாகி, தன் சிறகுகளுக் குள்ளே குஞ்சுகளைக் காத்துக் கொள்ளு கின்ற தாய் போல அம்மை இங்கே வாழுகின்ருள்.

கொடுப்பினை இருப்பவர்களே இந்தக் கோவிலுக்கு வருகிருர்கள்.

இந்தச சின்னஞ்சிறுவன் எழுதியதைப் படித்த எண்ணற்ற பெருமக்கள் இப்பொழுதும் கொல்லூர்த் திருத்தலத் திற்குச் சென்று கொண்டேயிருக் கிருர்கள்.

கடந்த செவ்வாயன்று, கொல்லூருக்குச் சென்றிருந்தேன். அந்தப் பேரானந்தப் பெருவெள்ளத்தில் மயங்கி மிதந்த பல நூறு பேரை நான் கண்டேன்.





என்னைப் பார்த்தவர்கள் எல்லாம் 'தாயி'ல் பார்த்துவிட்டு வருகிறோம் என்றார்கள். 'தாயை'ப் பார்த்து விட்டு வருகிறோம் என்று அவர்கள் சொன்னதாக எடுத்துக் கொண்டேன்.

அவளுக்கு நான் கருவியானேன்; அவளுக்கு நான் கைத்தாளமானேன்; ஆடுகின்ற அவளின் காலுக்கு நான் கழலானேன்; ஓடி வருகின்ற அந்தப் பேரானந்தப் பெரு வெள்ளத்துக்கு நான் ஒரு காலானேன்.

இளைஞர்கள், இனிய தாய்மார்கள் ஆயிரம் இருந்தால் அறுநூறு பேர் 'தாய்'படித்த பிறகன்றோ, இந்தத் 'தாய்' இருப்பது தெரிந்தது என்று பெருமைப் பட்டார்கள். நான் நினைத்தது நடந்தது; நினைப்பது இனி நடக்கும்.



கொல்லூர்த் திருத்தலம் எங்கே இருக்கிறது என்று உன் கட்டுரை யிலேக் குறித்துக் காட்டவில்லையே என்று கோபித்துக் கொண்டிருக்கிற கும்பகோணம் சாஸ்திரிகள், புதுக்கோட்டை சியாமளா, நேரிலே



வந்து சண்டை போட்டுவிட்ட
எருக்கஞ்சாவடி வேலு வாத்தியார்...
எத்தனை பேர்! எத்தனை பேர்!

நேற்றுப் புகை வண்டிப் பெட்டிக் குள்ளே மாதவன், வாசுதேவன் ஆகியோர், அவளால் அவள் தாள் வணங்கி அருள் நினைந்து எழுதும் உங்களைப் பார்த்தால் 'எங்களுக்கு வெற்றி' என்று கூறி என்னை அணைத்துக் கொண்டார்கள்.

செருப்பிற்கு கிடைத்த சிறப்பை நினைத்து என் சிந்தையணு ஒவ்வொன் றும் சில்லிட்டது. இதைப் படிக்கிற என் வாசக அன்பர்களே! தாய்மார்களே!! கொல்லூருக்குச் செல்லுங்கள்; கும் பிட்டு அவளைத் தொழுங்கள். உங்கள் கண்ணீரைத் துடைக்கிற கருணைக்கரம் அங்கே இருப்பதை அடையாளம் காட்டுகிறேன். மங்களூர் போக வேண்டும். அங்கிருந்து குந்தாப்பூர் வழியாக மூன்றுமணி நேரத்தில் அவள் ஆடுகிற குன்றுக்குச் சென்று விடலாம்.



முக்தி தருகிற சக்தி அவள்; அவளைப் பார்க்காத கண்களும் கண்களா? சந்தனம் உறைத்து செழிப்பது போல்



விரிந்து கிடக்கிற சௌபர்ணிகை
ஆற்றில் எங்கள் தாய் பேசுகிற மங்கல
மௌன மொழிகளைக் கேளாத
செவிகளும் செவிகளா? கால் படைத்
ததே கொல்லூர்த் திருத்தலத்தில்
தாவி நடந்து பலன் பெறவேண்டும்
என்று தானே! செவ்வாய்க்கிழமையன்று
நான் அங்கு இருந்தேன்.

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற
அருள்சித்தர், சாதி, சமயம் கடந்த
சமரச ஞானி, உடன் பிறந்தவன்
என்று என்னை உரிமையோடு
அழைக்கின்ற கோளியல் தெரிந்த
வள்ளல் என் குருவாசர் தவத்திரு.
காயத்ரி சுவாமிகள் முன்னிலையில்
நூற்றுக்கணக்கானவர்கள் புடைசூழ
எளியேன் இரண்டு நூல்களை
வெளியிட்டேன்.

நான் பாடம் கேட்டு பரவசப்படுகிற
பழந்தமிழ் வித்தகர், பண்பின்
சிகரம் தமிழ்மாறன் அங்கிருந்தார்.
பக்த கோடிகளைப் பத்திரமாக அழைத்து
வந்திருந்த தம்பி பழனிவேலு
உடனிருந்தார். 'நஜன்' எழுதிய
'முக்தி தரும் மூகாம்பிகா'வை என்
துணை மயில் பெற்றுக்கொண்டது.





நாயேன் கேட்டுக் கொண்டதற்கு
இணங்கச் சந்திரக் கிண்ணத்தின்
வெண்ணிறப் பாலுக்கு சந்தக் கவிதை
சர்க்கரை சேர்த்த, தாடி முளைக்காத
தாகூர், பரமனைப் பாடும் பாவேந்தர்,
கவிஞர் இளந்தேவன் எழுதிய,
'மூகாம்பிகையே! முழு நிலவே!!'
என்கிற புத்தகத்தை அடையாறு
சாமிநாதன் பெற்று அணைத்துக்
கொண்டார்.

துங்கக் கரிமுகத்து தூமணியை,
எம். பி. சாரதி அவர்கள் துதிக்க
சரஸ்வதி மண்டபம் களை கட்டியது.
திருமதி பத்மா கிருஷ்ணசாமி
அவர்கள் அம்பாளைப் பாடியபோது
அவளே வந்து கேட்டிருப்பாள்.
அப்படி ஒரு உணர்வு கலங்கும்
உருக்கம். செல்வி. ஜெயந்தியின்
செழுமையான பரதநாட்டியம்
நடந்தது. ஆடலும், பாடலும்
அலைகள் மிதக்கும் ஆர்வப்
படகுகளான, அமுதச் சொற்களும்
கொல்லூர் வெள்ளத்தில் குளிர்ந்து
நிறைந்தன.





## பிறந்தென்ன லாபம்! இனிப் பிறப்பெடுத்தென்ன லாபம்!

கோல மகரிஷி கண்டெடுத்து— கண்களில் ஒற்றி அல்லும் பகலும் வழிபட்டுக் கொண்டிருந்த ஜோதிர் லிங்கத்தில் அம்மை தன் அருளைச் செலுத்தி அதை வணங்குவோருக்கு வரம் தரும் வரப்பிரசாத வாரிதியாக மாற்றி வைத்தாள்.

இன்றும் அந்தச் சுயம்புலிங்கம் கோகர்ணம் வரை பரவிய—48 சதுர மைல் சுற்றளவில் அமைந்ததான ஒரு மஹா சக்கரத்தின் உச்சிச் சிகரமாய், உம்பர் தொழுதேத்தும் வெற்றித் திலகமாய் அமைந்துள்ளது.



தங்கக்கோடு ஒன்றால் இரண்டாகப் பிளக்கப்பட்டிருக்கிற இந்தச் சுத்த சுயம்



பிரகாசமான சுயம்பு லிங்கத்தைத்
தான் புராணங்கள்,

"ஸ்வர்ண ரேகாங்கிதம் லிங்கம்
நாஸ்தி நாஸ்தி ஜகத்ரயே"
என்று, "இது மாதிரித் தங்கக்கோட்டால்
பிரிக்கப்பட்ட சுயம்புலிங்கம்
வேறெங்கும் இல்லை" என்று
பலபடப் பாராட்டிப் பேசுகின்றன.

இந்த லிங்கத்தில் பெரிதான இடது
பக்கம் மகாகாளி, மகாலெட்சுமி,
மகாசரஸ்வதி ஆகியோரைக்
குறிப்பது போலவே, சிறிதான
இடப்பக்கம் மும்மூர்த்திகளைக் குறித்து
நிற்கிறது.

வரலாற்றுப் புகழ்பெற்ற இந்த
ஜோதிர்லிங்கம் 'ஸகல தைவத ஸார
பூதம்'—அதாவது அனைத்துக் கடவுள்
களின் பொருளாகத் திகழ்வது—
தெரிவது என்று புராண
இதிகாசங்களால் போற்றப்படுகின்றது.

இங்கேதான் மகாசக்கரம் என்ற
மகிமைக்குரிய ஸ்ரீ சக்கரத்தை ஆதிசங்கர
பகவத் பாதாள் நிலைப்படுத்தி
வைத்திருக்கிறார். பரம் பொருளான
ஆதிசக்தியின் அற்புத வடிவமான
ஸ்ரீசக்கரத்தைப் பார்க்கிற போது,





உண்டாகிற பரவசம் பதங்களில்
வழிந்து விடுகிற ஒரு மின்னல்,
மிருதுவான புல்லரிப்பு அல்ல. பிரளய
காலத்துப் பெருவெள்ளத்தைப்
போல ஆர்வ அலேகளில்
மனிதர்களே மூழ்கடித்து விடுகிற
பேரானந்தப் பெரு வெள்ளத்தின்
ஊற்றுக்கண்ணே இந்த ஸ்ரீ சக்கரம் தான்.

அதிலும், ஆதிசங்கர பகவத் பாதாள்
நிறுவி, நிருமாணித் திருக்கிற இந்த
மகா சக்கரம் தொன்மை உடையதும்,
நன்மை தருவதுமாக இந்தத் திருத்
தலத்தில் நிலே பெற்றுள்ளது.

கேரளத்து சோட்டானிக்கராவில்
'கள்ளமற்ற முனிவர்கள் கூறும் கருணே
வாசகத்து உட்பொருளாக' எழுந்தருள
வேண்டுமென்று கருநாடகத்துக் கருணே
வடிவினளான அருள்மிகு சாமுண்டீஸ்
வரியை ஆதிசங்கரர் கைதொழுதார்.
அம்மை மனம் கனிந்தாள். "ஆதி



சங்கரனே! அன்பு மகனே! நீ நடந்து
சென்ருல் உன் காலடித் தடங்களில்,
கண்பதித்து நடந்து வர நான் சித்தமாக
இருக்கிறேன். எந்த இடத்திலும்
திரும்பிப் பாராமல் நீ நடக்க வேண்டும்"
என்று திருவாய் மலர்ந்தாள்,



'கல்' 'கலீர்' என்று சிலம்பொலி
கேட்டுக் கொண்டே இருந்தது.
அம்மை வருகிருள் என்கிற அருள்
நினைப்பில் கரைந்த ஆதிசங்கரப்
பெருமான் நடந்து கொண்டே
வருகிருர். ஆறு ஒன்று குறுக்கிடவே,
அன்னை ஆற்றுக்குள் இறங்கி
வந்தாள். 'கல்' 'கலீர்' கேட்கவில்லை,
'திடும்' என்று திரும்பி விட்டார்—
ஆதிசங்கர பகவத் பாதாள். எல்லாம்
அவள் விளையாடல்.

"மகனே நீ திரும்பிப் பார்த்த
இடத்தில் இருக்கவே திருவுள்ளம்
கொண்டேன்" என்ருள்—அவளது
மாய விளையாட்டின் மகிமை
துலங்கும் படியாக, அவள் நின்று
நிலைத்த இடமே இன்று கொல்லூர்
என்று குறிக்கப் படுகிறது.

ஆதிசங்கர பகவத் பாதாள்,
தான் கண்ட கோலத்திலேயே அம்பாளை
வடித்தார். சங்கு, சக்கரத்தோடு
அபயம் அபயம் என்றபடி
பத்மாசனத்தில் தேவி
அமர்ந்திருக்கிருள்.



ஆதிசங்கரர் திருமுழுக்காட்டி,
திருநிலைப்படுத்தியிருக்கிற வண்ணமே



அம்பாள் இங்கே இன்றைக்கும் காட்சி தருகிருள்.

இந்த அற்புதச் சிலைக்கு அருகிலேதான் ஆதிசங்கரரும் அமர்ந்திருந்து தவம் மேற் கொண்டு தாயை வேண்டி யிருக்கிருர்,' அந்த இடம் இன்னமும் 'சங்கரபீடம்' என்று சரித்திரத்தில் வழங்கப்படுகிறது.

ஆதிசங்கரர் கண்டவண்ணமே கலைகளின் தலைவியாய்—கற்பகத் தருவாய்—கற்பகோடி காலங்களுக்கும் நிலைத்திருக்கும் காந்தப் பேரொளியாய்—கலங்கிய கண்களைக் கடைத்தேற்றும் களிப்புக் கடலாய்—கொல்லூரில் அவள் அமர்ந்தாள்.

இங்கே அவள் வடிவமே கலைமகள் வடிவம், ஆக வேதான் கவிஞர், கலைவல்லார், கற்பனையாளர், எழுத்தாளர் பாட்டுக்காரர் எல்லோருக்கும் இங்கிருந்தே அருள்பாலிக்கிருள்



எழுத்தா.இது' என்று கேட்கிருர்கள்? அவளது திருத்தலத்திற்கு அந்த எழுத்தாளர் வந்து, அவளை வணங்கித் திரும்பிய பிறகு 'இது வன்ரே எழுத்து!' என்று வாயார வாழ்த்துகின்றனர். இந்த மாயத்தை



விளக்கின்ற மஹாமாயா அங்கேதான் அருள் வடிவினளாக விளங்குகின்ருள்.

இந்தத் தலத்தில் கண் பதிக்காவிட்டால் பிறந்தென்ன லாபம்? இனி பிறவி எடுத்தென்ன லாபம்?







## சான்று வேண்டாத சத்தியம்

எனது எந்தச் சொற்களிலும் வடியாத
எழிலோடு விளங்குகின்ற அருள்
வடிவினளான அன்னை மூகாம்பிகை
அற்புத சக்தி படைத்தவள்,
என்பதற்கு ஆயிரம் சான்றுகளைக்
கூறலாம்.

அவள் சான்று வேண்டாத
சத்தியம் என்பதால்தான் ஒன்றும்
நான் கூறுமல் விடுத்தேன்.

அன்ருடம் அவளை அனுபவிக்கிற
அனந்தகோடி உயிர்களுக்கல்லவா
அவளது ஆற்றல் விளங்கும்! அவளது
அருள் துலங்கும்!



என்ன செய்வாள்? எப்போது
செய்வாள்? என்று சொல்ல முடியாத



அளவிற்கு அற்புதங்களை நிகழ்த்திக்
காட்டுகிற அதிதேவதை அவள்.

அவள் மாதிரி நினைத்த
போதெல்லாம் நேருக்கு நேர் நின்று
உதவுகிறவர்கள் வேறு எவரும் இல்லை.

அவளை உணர்ந்தால் மாத்திரம்தான்
நான் சொல்லுவதன் பொருள்
நன்குகப் புலப்படும்.

அவளை அணுகிப் பார்த்தவர்களுக்கு
மாத்திரம்தான் அவளது அன்பு
வெள்ளத்தில் நனைந்தவர்களுக்கு
மாத்திரம்தான் எப்படி அவளது
கருணைப் பிரவாகம் அவளை
நம்புகிறவர்களைக் கடைத்தேற்றும்
என்பது தெளிவாகப் புலப்படும்.

எனது இருட்டுப் பொழுதுகளில்
எப்படி அவள் வெளிச்ச ஊர்வலமாக
விளங்கி வருகிருள் என்பதை நான்
வார்த்தைகளில் விளக்கிக் காட்டுவது
என்பது இயற்கையாகவே இயல்பான
தல்ல.



உணர்ந்தும் உருவகப்படுத்த இயலாத
உள் மனத்தின் பேரானந்தமாக
விளங்குகிற பெருமாட்டி அவள்!



எனக்கு ஏற்பட்ட, ஏற்படுகிற
அளவில்லாத ஆனந்தம் எல்லோருக்கும்
ஏற்பட வேண்டும் என்கிற பெருத்த
ஆவலால் தான் இப்படி அவள்
அருளால் அவள் தாள் வணங்கிச் சுற்றிச்
சுற்றி வந்து சொன்னதையே
சொல்லிக் கொண்டிருக்கிறேன்.

சொன்னதையே சொல்லுவது சில
வேளை குற்றம். அம்பாளைப்பற்றி
சோர்வில்லாமல் சொல்லாமல் இருந்தால்
தான் குற்றம்.

ஆகவே தான் அடுத்தும் தொடுத்தும்
இத்தனைமுறை சேலைத்தலைப்பைப்
பிடித்துக் கொண்டு செய்வதொன்றும்
அறியாத சிறுபிள்ளை போல வளைந்து
வளைந்து அவளையே விழுந்து வணங்கிக்
கொண்டிருக்கிறேன்.

ஆராதனைக்கு அவளைவிட அற்புதம்
இல்லை. அன்பு காட்டுவதற்கு
அவளைவிட மேலான அன்னை இல்லை.
எக்காலத்திலும் ஏற்றம் தரும் வல்வினை
போக்கும் வல்ல கொல்லூரைவிட
வணங்கப் பதி வேறு இல்லை.



பலபேரின் வாழ்க்கை, பூமிக்குச்
சொல்லுகிற புனிதமான உண்மை
இது தான்,



இவைகள் எல்லாம் மூட நம்பிக்கைகள் என்று முப்பொழுதும்பேசி வருகிற மகா மனிதர்களைப் பற்றி எனக்கொரு சந்தேகம் உண்டு.

இவர்களுக்கு இதயம் இல்லாமல் இருந்தால் கவலை இல்லை. இவர்களில் சிலருக்கு சிந்திக்கிற ஆற்றலும் கூட இப்படிச் சிந்திப் போகிறதே என்பதில் எனக்கு அதிகக் கவலை உண்டாகிறது.

"மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா" என்பது போல சொன்னதையே சொல்லிக் கொண்டிருக்க வேண்டும் என்கிற சூழ்நிலைக்கு ஆட்பட்டுத் தான் இவர்கள் திரும்பத் திரும்பச் சொன்னதையே சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்.

ஒரு நாளாகிலும் ஒரு மணிப் பொழுதாகிலும் கொல்லூர்த் திருத்தலத்திற்கு அவர்கள் வந்து கால் பதித்தால் அவள் அருள் பெறுமலும் இருக்க மாட்டார்கள்.



அதற்குப் பிறகு நம்பிக்கை வரவில்லை, நல்லது நடக்கவில்லை என்றும் சொல்ல மாட்டார்கள்.



ஆகவே இந்தக் கட்டுரைத் தொடர்
நிறைகிற புனிதமான இந்தநேரத்தில்
நெஞ்செல்லாம் பூ மணக்க
நினைவெல்லாம் அவள் 'பா' மணக்க
அவளை நம்பி வந்தவர்களுக்கு
அவள் என்றும் ஆற்றி வருகிற
அனந்தகோடி உபகாரங்களுக்காக
அவளுக்கு நன்றி தெரிவிப்பதோடு
அல்லாமல் அவளை நம்புகிறவர்கள்
நம்பாதவர்கள், பார்த்தவர்கள்
பாராதவர்கள் அனைவருக்கும் அவள்
அருள் என்றும் இருக்க வேண்டும்
என்று வேண்டிக் கொள்ளுகிறேன்.

அவளை மீண்டும் மீண்டும்
தரிசிக்கிற பெரும் பேற்றை மாத்திரம்
அன்னை எனக்குத் தந்தால் அது
போதுமானது.



